திருக் களர்
ஸ்ரீ வீர சேகர ஞான தேசிகர்
திரு எம் பாவை,
திருப் பள்ளி எழுச்சி.
சிக்கல்-
உகந்த லிங்க ஞான தேசிகர்,
திருக்கூடத்தி
சிகர்,

சிகர்,



ஸ்தோத்திர ரச மஞ்சரி.



இயற்றியவர்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 17 | 4 | தமைபும் | தமையும் |
| ,, | 10 | படுவையேல் | பாடுவையேல் |
| ,, | 15 | காதலோடு | காதலொடு |
| 19 | 14 | பொலிவும் | பொலியும் |
| 25 | 9 | அரிய | ஆரிய |
| 30 | 3 | சான்றவா | சான்றவர் |
| 31 | 15 | வோப் மள்ளி | வோய்பள்ளி |
| 32 | 4 | விசுபில் | விசும்பில் |
| ,, | 6 | ஒழுப்பது | ஒழிப்பது |
| ,, | 13 | நோஇயல் | நேர்இயல் |

# திரு எம் பாவை



இயற்றியவர்

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாச்சார்ய
ஸ்வாமிகள்
வேதாந்த மடம்
திருப்பூவணம்.



## விநாயகர் வணக்கம்

### காப்பு.

செய்ய வீரநல் சேகரச் செம்மல்மேல்
உய்ய வேண்டி உ ஞற்றுநல் பாவைதான்
வைய கம்புகழ் வண்ணமு டிந்திட
ஐயன் மாமுகன் ஐங்கரன் போற்றுவாம்.

## நூல்.

சீர்அமைந்த வானோர்கள்
தேறும் விடியல்எனப்
பேர்அமைந்த மார்கழியில்
பெட்புடனே வைகறையில்
நேர்அமைந்த சான்றோர்கள்
நீர்படிந்து தூய்மையுடன்
தார்அமைந்த மாமலரைச்
சாத்திப் பணிகின்றார்
கார்அமைந்த பூம்குழலாய்
கண்விழியா தேஉறங்கல்
ஏர்அமையு மோவிழிப்பாய்
எம்வீர சேகரனைப்
பார்அமைந்த சித்தியுறப்
பாடித் தொழுதுநின்று
நார்அமைந்த நெஞ்சமுடன்
நாம்தொழுவோம் எம்பாவாய். (1)



ஆதித்தன் வானவெளி
ஆர்வதன்முன் தூக்கம்அற்றுச்
சாதுவர்க்கம் யாறிழிந்து
தட்பம்உற வேகுளித்துப்
பேதம்அற எங்கும்
பிறங்கும்எழில் நல்குருவைச்
சோதிமறை யாவையுமே
தொட்டறியா தேகலங்கும்
ஆதிநறும் கொன்றை
அலர்துளபத் தார்அணிவோய்
பூதி புனையும்எங்கள்
புண்ணியனே என்றுதொழ
மாதே வளருதியோ
மாமுனிவீ ரேசனைநாம்
போதம் உறத்தொழுவோம்
போதுகநீ எம்பாவாய். (2)

தெய்வத் திருமறைகள்
சென்றறியா தோலமிடக்
கைவைத்த சான்றோர்கள்
காலைநறும் நீர்ஆடி
மெய்வைத்த நம்குருவின்
மேலாம் அடிபரவி
உய்வைத் தரத்துதிக்கும்
ஓங்கும்ஒலி எங்கும்உற
மைவைத்த பூம்குழலாய்
மற்றறியா தேதுயில்வாய்
செய்வித்தும் செம்சாலி
தேங்கும் திருக்களரில்
பைவைக்கும் பாம்பணியும்.
பண்ணவன்வீ ரேசன்அடி
பொய்வைக்கும் மாயைகெடப்
போற்றுவம்வா எம்பாவாய் (3)

24-5



அஞ்ஞாநம் மூட
அலைந்து திரிந்திடும்என்
பொய்ஞ்ஞாலம் அத்தனையும்
போக்க நினைந்தருளிச்
செம்ஞாயி றென்னத்
திகழும் திருஅருளால்
பொய்ஞ்ஞாநம் வல்லே
புறம்கொடுப்ப ஏற்றிவைத்த
மெய்ஞாந நல்விளக்கை
மீதொளிரச் செய்துமிக
எஞ்ஞாந மும்கடந்த
இன்பவடி வத்தைஒளிர்
விஞ்ஞாநம் ஆக
விளக்கியவீ ரேசன்சீர்
எஞ்ஞான்றும் நெஞ்சுருகி
ஏத்துவம்வா எம்பாவாய். (4)

அல்லல் பிறவி
அறுப்பதற்கா உள்இருளை
நல்லகன்மம் ஒன்றும்
நலியாது பூதஇருள்
வெல்லும் படையால்
விலகுமோ எல்விளக்கால்
நில்லா தழியும்
நிலைமைபோல் ஞானத்தால்
இல்லை எனச்செய்தல்
ஏலும்எனத் தொண்டருக்கு
மெல்லக் கடைவிழியால்
வீச்சித் துணர்வளிக்கும்
மல்லல் திருக்களர்எம்
மாமுனிவீ ரேசன்சீர்
சொல்லித் துதிப்பத்
துயில்எழுவாய் எம்பாவாய் (5)



சோதிமறை ஆறங்கம்
தோன்றத் துருவிஎன்றும்
மேதை உறுவோர்
வியப்பவீ ரேசகுருத்
தாதா உரைத்திடவே
தத்துவம்எ லாம்கடந்து
நீதான் தனிஆக
நித்தம் இருப்பதனைப்
பேதாய்நீ கேட்டிருந்தும்
பேதுற் றயர்ந்தனையே
பாதாளம் ஏழினுமோ
மேலும் பறைசாற்றி
ஓதும் அவன்உரையை
ஓம்பிப் பவம்துடைக்க
நாதன்அவன் நல்தாளை
நாம்தொழுவோம் எம்பாவாய். (6)

சாதநங்கள் நான்குநனி
சார்ந்தவகை தான்அறிந்தே
வேதநம் செய்தளிக்கும்
வித்தகனும் வீரேச
நாதனைநம் ஆசை
நவைமரத்தின் வேர்களைந்து
சோதனைகள் செய்துநலம்
தோற்றுவித்த பெம்மானை
மாதம் பலவினும்சீர்
மன்னிமிளிர் மார்கழியில்
வாதனைகள் இல்லாமல்
வாய்ஆர வேபுகழ்ந்து
பேதம் கழன்ற
பெரும்பொய்கை நீர்ஆடி
ஏதம் கழற்ற
எழுந்திருப்பாய் எம்பாவாய். (7)



வேலைசூல வும்தடமண்
விண்வாயுத் தீஅறல்விண்
கோலும் மதிஇரவி
கூடும்உயிர் எட்டுவித
ஆலயங்கள் உள்ளே
அமர்வீர சேகரனை
நால்ஆகும் வாயானும்
நாரம் துயில்வோனும்
மேல்ஆன சூள்உறவு
விண்டறியா தேகலங்கி
மால்ஆக நிற்க
வளர்ஒளியை நல்குருவை
ஏலா இளம்கிளியே
எய்யா துறங்கிடுதல்
சாலாது நீஎழுவாய்
சாற்றுவம்நாம் எம்பாவாய். 8

பொன்னும் பிறஎவையும்
பொள்என் றருள்வதுடன்
தன்னையுமே சார்வார்
தமக்களிக்க வல்லவனை
அன்னைஎனத் தொண்டர்தமை
ஆதரிக்கும் தண்அளிகொள்
மன்னவனைச் சங்கரனும்
மாதவனை ஒப்பானைத்
தென்னைபலா கந்தி
செழிக்கும் திருக்களரில்
பின்னம்அற நிற்கும்
பெரியோனை வீரேசத்
தென்னவனை நல்குருவைத்
தென்கழநி ஊர்ப்பதியை
வன்னக் கரும்குயிலே
வாழ்த்துவம்வா எம்பாவாய், 9



தண்நீரும் காவேரி
தான்எனவே சான்ருேர்கள்
உண்நீர்மை கொண்டுபுனல்
ஓயா அதின்மூழ்கி
மண்ஆர் அமுத
வளம்ஆர் திருக்களரில்
தண்ஆர் அளிவீர
சேகரன்சீர்த் தாள்பணிந்தார்
உண்நோய்கள் எல்லாம்
ஒழியவகை செய்வதற்கிங்
கெண்ணுது வாளா
எவனே துயிலுகின்ருய்
பண்ஆர் மடமொழியே
பாரில் அவன்அருளாம்
தெண்நீர் படிவோம்
தெளிந்தெழுவாய் எம்பாவாய். 10

கொள்ளைகொள நெஞ்சமதைக்
கூடும்அழ காரினும்என்
கிள்ளைஎனச் சொற்கள்
கிளக்கினும்என் நல்களர்வாழ்
வள்ளலைநம் வீரேச
மாமணியைத் தான்பரவி
ஒள்ளியசீர் அன்புடனே
உற்ற அடியவர்க்குப்
பொள்ளல்உடல் மூன்றுப்
பொருந்தும்இரு பத்தேழும்
எள்ளும்வகை யான்என்
றிறுகும் முடிச்சவிழத்
தெள்ளுபுலக் கைகொடுத்த
தேவனைவாழ்த் தாதொழியின்
கொள்ளும் துயில்நீங்கிக்
கோதாய்வாழ்த் தெம்பாவாய் !1



மாகாயம் மூன்றுமே
மாண்டொழியும் என்றுசொலி
ஆகாய ரூபம்என
ஆக்கியவீ ரேசன்சீர்
வாகாய நாம்பாடி
வாழ்த்துதொறும் வாழ்த்துதொ
போகாய கண்களின்நீர் [றும்
பொள்என்று போய்உகவே
தீகாயும் நல்மெழுகு
போலமநம் சேர்ந்துருகும்
ஓகோ உரைநாவும்
உள்ளும் உடம்பும்எலாம்
பாகாம் எனஇனிக்கும்
பன்னும்அவன் சீர்பாடச்
சேகோயும் நீர்த்தடத்தில்
சென்றாடாய் எம்பாவாய் 12

பெண்உருவை நெஞ்சில்
பிறங்கவிடான் வீரகுரு
நண்ணும் உமைஉருவை
நன்குமநம் நீங்கவிடான்
கண்ணும் கருத்தும்ஆக்
கொண்டவனைப் பாடிஅன்பர்
உண்நெக்கு நிற்பவிழி
யோடுநீர் தாரைகொளக்
கண்ணைத் துயின்றவமே
காலத்தை போக்குகின்ருய்
கண்ணிற் கினியான்
கழலின் புகழ்பாடின்
எண்ணில் பிறவிவரா
வந்தாலும் எய்ப்படையோம்
அண்ணல் அவன்புகழை
ஆதரித்தோ தெம்பாவாய். 13



வண்ணக் கிளிமொழியார்
மாமைஅழ கெப்போதும்
உண்நெக் குருகியிட
ஓவியத்தும் பாராதான்
எண்ணின் நமைஅவன்தான்
ஏன்றுகொளான் என்றெண்ணிக்
கண்ணைப் பிசைந்து
கவலைமேல் கொள்ளாதே
அண்ணல் பரசிவன்போல்
அன்பர்க் கெளியவன்காண்
தண்ணளியால் வந்ததிருத்
தாய்மார்க்கும் மெய்ஞ்ஞானக்
கண்ணளித்து வீடருளும்
கண்ணியம்கொள் வீரேசப்
புண்ணியனை நீஅணுகிப்
போற்றிடுவாய் எம்பாவாய் 14

தார்மேவித் தாரணியில்
தன்னைத் தரவல்ல
நார்மேவும் வீரகுரு
நாதன்இவன் பார்ஆரும்
தேர்மேவு பிஞ்ஞகனே
தேரின்என உள்கசிந்து
சீர்மேவும் அன்பர்எலாம்
தேர்ந்துநனி வாழ்த்துகின்ருர்
ஏர்மேவும் முத்தியினை
எய்திப் பிறப்பகற்றப்
பார்மேவி நல்தவங்கள்
பண்ணுதலும் வேண்டாவே
கூர்மேவு மைவிழியாய்
கொஞ்சுதுயில் விட்டவனை
நேர்மேவி வாழ்த்திடுவாய்
தேர்ந்திடலாம் எம்பாவாய் 15



நாதன் திருக்களரான்
நங்கள்வீ ரேசகுரு
ஏதம்வ ராதளித்து
எம்தமையும் உள்கொண்டு
போதமதைத் தந்திரண்டு
பற்றையுமே போக்கினன்காண்
மாதரசே கீதைபுகழ்
மார்கழியில் நீர்முழ்கிப்
போதலரும் போதினில்அப்
புண்ணியனைப் படுவையேல்
வாதனைகள் மூன்றும்
வறுத்தவிதை ஆகிவிடும்
சோதிமயம் ஆகத்
துலங்கிடுவாய் அன்னவனைக்
காதலோடு பாடிக் (16)
கசிந்துநிற்பாய் எம்பாவாய்.

வண்டொலிக்கும் சோலைமிக
மன்னும் திருக்களரில்
பண்தழைக்கும் பாஞான
சம்பந்தர் பாடல்பெறும்
திண்தடம்தோள் பாரிசா
தேசுரர்க்குக் கோயிலதைக்
கண்டிரதம் ஐந்தியற்றிக்
கண்டவர்கள் தாம்வியப்புக்
கொண்டமையக் கும்பாபி
டேகம்கு யிற்றித்தேர்
மண்டிவர ஈசரையே
வைத்திழுக்கும் நேரமதில்
திண்தேர் நிலைக்கமகா
தேவஎன வீரேசக்
கொண்டல்முத்தி கொண்டவிதம் (17)
கூறுகநீ எம்பாவாய்.



நம்மையும் ஓர்பொருளா
நாடி நமஆன
பொய்ம்மைஉடல் ஆவிபொருள்
போதும்எனக் கொண்டுதன்
மெய்ம்மைஆ நந்தஉரு
மேவ நமக்களித்த
செம்மை அருளாளன்
தெய்வ சிகாமணியாம்
தம்மை அறிந்தவர்க்குத்
தாமாய் அமர்ந்தகுரு
இம்மை மறுமைஎலாம்
ஏகபரம் என்றருள்வோன்
பொய்ம்மை அகலப்
பொலிவும் நறும்சோதி
ஐம்மைகொளும் வீரேச (18)
அண்ணலைப்பா டெம்பாவாய்.

வாழைஎனும் புல்லில்உறும்
மட்டைஎலாம் நீக்கிநடுக்
காழ்அமைந்த தண்டைக்
கதுவல்என மேல்மேலாச்
சூழுகின்ற கோசம்எலாம்
சூழ்ந்தொதுக்கத் தோன்றுகின்ற
பாழினையும் நீக்கப்
பயில்கரிநான் ஆவன்என
ஆழும்அந்த நல்உணர்வும்
அற்பம்என விட்டகமே
பேழைப் பிரமம்எனப்
பேசும்நெஞ்சும் தான்நழுவ
வாழ்கஒன்று என்றுரைத்த
மன்வீர சேகரனை
ஏழுபவம் தொலைய (19)
ஏத்திடுவோம் எம்பாவாய்.



தேவர்எலாம் போற்றும்
திருக்களர்வீ ரேசன்தாள்
ஆவலொடு பாடி
அடைந்தடியம் என்றைக்கும்
ஓவல்இன்றி வீணே
உழன்று கவல்மனத்தைத்
தாவாப் பிரமத்தே
தான்நிலைக்க வேவைத்துத்
தேவர் எனஉலகர்
தேறநிலைத்துநின்றால்
சாவும் பிறப்பும்
தவிர்ந்த சொருபமதா
ஆவதுமெய் என்ன
அறிந்தவன்தாள் பாடிஉறப்
பூஅலரும் பொய்கைபடிந்
தாடுகம்வா எம்பாவாய்.(20)

பாவலர் நாளும்
பதமலர் போற்றிநிற்க
நாவலர் மெய்ம்மைதன்னை
நன்குரை செய்கநன்றே
தேவர்கள் உள்உவப்பத்
திங்கள்மும் மாரிபெய்க
காவலர் பூமிதன்னைக்
காக்கவே தாந்தம்எங்கும்
ஓவுதல் இன்றிஎன்றும்
ஓங்குக மெய்உணர்வை
ஏவரும் கொள்ளவந்த
எங்கள்வீ ரேசன்நல்ல
பூஅடி வாழ்கஇன்பம்
பூத்திட என்றுரைத்து
நாவிஞல் வாழ்த்த (21)
கயந்தெழுவாய் எம்பாவாய்.



## திருப் பள்ளி எழுச்சி.

சூரியன் கிழக்கினில்
தோன்றினன் நன்றே
தூயநன் மரைமலர்
விரிந்தன துணைந்தே,
ஆரியன் திருஅடி
பழிச்சினர் அடியார்
அகிலமும் விளங்கவே
பறைந்தன மறைகள்,
காரியம் காரணம்
அன்றிஇன் றெனவே
கண்டனர் களிப்புறக்
காட்சிய தாகக்,
தேரியல் திருக்களர்
திகழுநல் குருவே
திருஅடி தரப்பள்ளி
எழுந்தரு ளாயோ. 1

ஊறியல் உடல்களாம்
முன்றையும் தள்ளி
உன்உரு அறிவென
உணர்த்திய நாளும்,
மாறியல் பின்றிய
மக்களுக் கருளி
வல்இருள் அகற்றிய
மாசறு மணியே,
ஆறியல் பங்கமும்
அளவிடற் கரியாய்
அருணனும் விசும்பிடை
அடைந்தனன் நன்றே,
பாறியல் பின்றிய
வீரசே கரனே
பதம்தரத் திருப்பள்ளி
எழுந்தரு ளாயே. 2



சீர்தரும் திருஅருள்
தனைப்பெறக் கருதிச்
சிறப்புறும் அடியவர்
சங்கமொ டடைய,
ஏர்தரும் மறைகளின்
முடிவினைக் கொள்ள
இங்குவந் தனைகொல்என்
றிசைத்திடத் தொழவும்,
அரிய அடிமலர்
தலைமிசை வைத்தே
ஆவியொ டாக்கைகொண்
டாட்கொளும் குருவே,
வீரசே கரதவ
விடிந்தது பிறப்பு
விளிவுறத் தொழப்பள்ளி
எழுந்தரு ளாயே. 3

திருஉறை கோவிலூர்த்
திருப்பதி மருவிச்
செகம்எலாம் புகழ்ந்திடத்
திருக்களர் சென்று,
எருக்கணி பாரிசா
தேசுரர் தமக்கும்
எங்கள்தா யாகிய
அமிர்தவல் லிக்கும்,
பெருநகர் அமைத்தநல்
பெருமையைப் பாடிப்
பெரும்தவப் பெரியரோ
டடியனும் அடைந்தேன்,
திருக்களர் வீரசே
கரகுரு தேவே
திருஅடி தரப்பள்ளி
எழுந்தரு ளாயே. 4



ஊரண நாபியை
உவமைகொண் டிந்த
உலகினைத் தோற்றிநின்
றழிதரச் செய்யும்,
ஆரணத் தமர்ந்திடும்
ஐக்யமா வாக்யம்
அவன்இவன் என்பதை
அறிகெனத் திநமும்,
காரண போதம
தளித்திடும் குருவே
கண்டுன தடிதொழத்
தவத்தினர் புகுந்தார்,
ஏரண உருவனே
எழிற்பள்ளி இரிந்தே
எழில்வீர சேகர
எழுந்தரு ளாயே. 5

திங்களும் மழுங்கிடத்
திநகரன் புகுந்தான்
செப்பருஞ் சீவர்கள்
திமிரம தொழிய,
மங்கள ஆரியன்
எனநின்று பெயரும்
வடிவுமி லாதசெம்
சொருபம தருள,
மங்கையர் மகவுபொன்
மயக்கம தொழித்தே
மண் இடை மனிதனுய்
வந்துநல் வளத்தால்,
பங்கமில் திருக்களர்
உறைவீர குருவே
பதம்தரத் திருப்பள்ளி
எழுந்தரு ளாயே. 6



தாரகம் ஆயதோர்
பிரமத்தை அறியத்
தயக்கம தின்றிய
சமயமீ தெனவே,
நாரகம் கொண்டுனை
நம்பிவந் தடைந்தேன்
நாயக வீரசே
காதவ நாயேற்,
காரண முடியினில்
அமர்தரும் அதனை
அறிந்தினல் ஒழிவின்ப
அடைவினை அடைய,
தாரணி தனில்ஒரு
விரகினைத் தரவே
தலையுறும் குருபள்ளி
எழுந்தரு ளாயே. 7

நூல்பல கல்எனும்
நோன்மைகொள் உரையை
நோக்கிலேன் சான்றவா
இனத்திரு எனும்ஓர்,
வாலிய உரையையும்
மதித்திலேன் ஐயோ
மாமறைப் பொருளுறும்
வழிஅறி வேனோ,
தாலம தனில்உயர்
தருவீர குருவே
தத்துவம் தெரிவகை
சார்ந்தெமக் கருளக்,
கோலிநல் வயல்வளம்
கொழிதிருக் களர்ஊர்க்
குலபதி திருப்பள்ளி
எழுந்தரு ளாயே. 8



நங்கையர் நவில்மொழி
நன்றெனக் கருதி
நாட்களை அவத்தினில்
கழித்துற வாடி,
இங்கியல் வழிஅறி
யாதுழல் வேனை
இரைவீர அடிசிரம்
இருத்திக்கண் பார்த்தே,
பொங்கும்ஓர் இயல்பாகப்
பொருந்துவ தாம்மா
புறம்பிற பலஇயல்
பொருந்துவ என்றே,
சங்கைய தறச்சொலி
எனைத்தனி ஆளத்
தரைவரு வோய்மள்ளி
எழுந்தரு ளாயே. 9

வேரியம் கமலமோ
விரிந்தன இரவி
விரைந்தனன் பறவைகள்
விரைந்தன விசுபில்,
பேர்இயல் பிறப்பதை
ஒழுப்பது போலப்
பிலத்தினில் சென்றன
நாகங்கள் எல்லாம்,
கூரிய நின்திரு
வாக்கியம் கொண்டே
கோதறு தத்துவ
மசிப்பொருள் தேர்ந்தோம்,
நோஇயல் திருக்களர்
வீரசே கரனே
நின்பதம் தொழப்பள்ளி
எழுந்தரு ளாயே. 10

## ஸ்ரீ உகந்த லிங்க தேசிகர் தோத்திரம்.

தெருளுறு வதற்காம்
நித்தியா நித்தந்
தெரிவிவே கத்தொடும்
இகத்தின்,
மருளுறு பரத்தின்
விராகசம் பத்தி
மாமுமுட் சுத்துவம்
அருள்வான்,
அருளொடு வைராக்
கியம்பத்தி ஞானம்
ஆகிய நான்குமோர்
உருவாய்ப்,
பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (1)

இருளினைப் போக்கிப்
பொருளினைத் திகழ்த்தும்
இரவிபோல் பொருளினை
மறைக்கும்,

இருளினைப் போக்கி
ஞானத்தை ஈந்தே
இன்பரு பத்தினை
விளக்கி,

அருளினைப் பெறுமா
ணவர்க்குமுக் காயம்
அகற்றியே விட்டினை
அருளப்,

பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம், (2)



மருளினைப் பொருந்தி
மானுட ஆக்கை
மருவியு மயலினைப்
போக்காப்,

பொருளினைப் பொருந்திப்
புலான்மய உடலில்
பொழுதினைக் கழிக்குமெந்
தமக்கும்,

அருளினை ஈந்தே
அகங்கர நீங்கி
ஆந்மரு பத்தினை
அடையப்.

பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (3)

இருண்மய ஆகும்
மாயைவந் தெம்மை
ஈர்த்திடா திருக்குமா
றருளித்,
தெருள்விழி யோர்கள்
பார்வையிற் பட்டுச்
செயல்களை விலகிடச்
செய்து,
உருண்மநம் ஒழிய
உண்மையை உணர்த்தி
உயரடித் தாமரை
ஈயப்,
பொருள்வை நன்னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (4)



பொருளலாப் பொருளை
பொருளென மருண்டு
பொய்புகல் உலகத்தில்
இருந்தே,
பொருளறம் இன்பம்
வீடெனு நான்கும்
பொருந்துதற் காசைமீக்
கூரல்,
இருளினைக் கொண்டு
ஒளியினைக் காண
இச்சைவைக் குதல்சமம்
எனச்சொல்,
பொருள்வை நன்னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (5)

பொருளறத் துறந்து
பிச்சையேற் றருந்தும்
பூரண சாதந
மிலதேல்,

அருளினை யடையா
தவத்திலே திரிவாய்
ஆசையைப் போக்குமா
றறியாய்,

தெருளினைப் பெற்ற
சாதுசங் கத்தாற்
றெளிகுவை யெனப்புகல்
குணமார்,

பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்தி நம்
பணிவாம். (6)



உருவினைப் பெற்றும்
உருவினால் உறுபயன்
உண்மையா வுளதிலை
யானால்,

மருளினைப் பெற்று
மறுமுறை பிறந்தால்
மாநுட ஆக்கையே
வருமோ,

கிருகம தடைதல்
கிருகரன் கிருபை
கிடைக்கினும் இன்றெனில்
இலையென்,

பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்தி நம்
பணிவாம். (7)

செருகல்செய் யாது
பொறிகளைப் போற்றித்
திநகரன் போலவே
விளங்கிச்,
சருவகம் அடக்கிச்
சருவணம் பேசாத்
தன்மையைச் சாருமா
றருளப்,
பொருந்தலர் இன்றிப்
பொருந்தார்வாழ் புலங்கள்
பொலிவுறு மாண்பினை
யுடைய,
பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (8)



மருளர்கள் கூறும்
மாண்பிலா மொழியை
மதித்துமே நாளினைக்
கழித்தேன்,
இருளர்கள் இன்றி
இருக்குநல் தேசம்
எங்குள தெனத்திரிந்
தலைந்தேன்,
அருளர்கள் கூறக்
கேட்டுநான் அடைந்தேன்
அன்பினுல் ஆளுதற்
காகப்,
பொருள்வை நன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம். (9)

10 ஸ்ரீ உகந்த லிங்க தேசிகர் தோத்திரம்.

அருளுடை யோர்கள்
அருளிலே என்றே
அன்பினல் அறைந்தனர்
பொய்யைத்,

தெருளுடைய யவனே
அதனையுங் கேட்டுச்
செப்பருங் கையிலையில்
இருந்தான்,

மருளுடை யானே
மருளனென் றுண்மை
வாசகம் கூறவே
வந்து,

பொருள்வைநன் னகர்வாழ்
உகந்தலிங் கேசன்
பொன்னடி களைத்திநம்
பணிவாம் (10)

ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந 11
தேசிகர் தோத்திரம்.

பாவலர் கூறும்
பஞ்சகோ சத்தின்
பான்மையைப் பகுத்துநன்
குணரா,

ஆவலில் லாமல்
இருக்கினும் அருளால்
ஆக்கையை வெறியினல்
நீங்கி,

நாவினல் வழுத்தா
முத்தியை யெமக்கு
நல்கியே பவந்தனைத்
துடைக்கக்,

கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (1)

ஏவரும் விரும்பும்
நான்மறை இயம்பும்
எண்ணரும் கருமநற்
பத்தி,

தாவரு ஞாநம்
அடைந்துய்வான் அருளச்
சற்குரு மூர்த்தியாய்
விளங்கி,

நாவில்வாழ் மாது
தவனுமாய்ப் பொன்னின்
நற்றவன் உமைகொழு
நனுமாய்க்,

கோவிலூர் வாழும்
முத்திரா மலிங்க
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (2)



மூவிரு சமயம்
ஆகிய மார்க்க
முத்தியை அடைவிக்கா
தென்று,

நாவினுல் உரைத்து
நல்லதி காரி
நன்மையை நாடியே
சடமாம்,

ஆவனல் ஆக்கை
அனைத்துநீத் தெம்தம்
ஆந்மரூ பத்தினை
அருளக்,

கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (3)

 ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரம்.

பூவில்வாழ் மாது
கணவனல் கிதை
புகறுநற் சொரூபத்தை
உணர,
மேவுசா தநநான்
கமவைரப் பெற்ற
மேன்மைசேர் மநமுடை
யாவர்க்குத்,
தூவில்சத் சொரூப
சுகத்தினை அளித்துச்
சுருதிகள் போற்றவிற்
றிருந்து,
கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (4)

ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரம். 

பாவிகள் தமது
பாவத்தைப் பாறிப்
பற்றினைப் பதைப்பறப்
போக்கி,
நாவினல் வழுத்த
யோக்கிதை செய்த
நன்மையை நினைந்துநைந்
துருகித்,
தேவிதே வனுமாய்
வன்னிமா முகனுய்ச்
செவ்விய வேலுடை
யவனுயக்,
கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (5)

பூவில்வாழ சிவர்
போற்றவிற் றிருந்து
புநிதரின் பாவநீக்
குதற்கு,
ஆவியோ டாக்கை
தநமிகப் பெற்றே
யரியமா வாக்கியம்
அருளி,
வீவரும் ஞாநம்
அடைந்தன்பு பெறவே
வியன்குரு வாகிவந்
தாண்ட,
கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (6)



ஓவரும் பாமாத்
துவிதஞா நத்தை
உண்மையாய்ப் பெறவிருப்
புடைய,
தாவரும் அதிகா
ரிகளினைக் காணில்
தத்துவ மசிமுதற்
பொருளை,
ஏவமில் லாமல்
இயம்புவான் கருதி
எழில்மிகும் ஆக்கையைத்
தாங்கிக்,
கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம் (7)

பாவிகள் செய்த
பாவத்தைப் போக்கிப்
பாரினில் தடாகம்வீ
திகளில்,
கூவியே அழைக்க
இருக்குநல் குணமார்
குணேசநல் தயையினைப்
பொருந்தி,
நாவினல் உறைக்க
நல்லுப தேசம்
நவிலவே கருணையால்
எழுந்து,
கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (8)



மூவர்கள் போற்ற
முதன்மறை புகழ
முநிவர்கள் கூட்டமே
முழங்கத்,
தேவர்கள் புகழத்
திருக்கரத் திலங்கும்
திரளுறு நெல்லியின்
பழம்போல்,
சிவர்கள் உண்மைச்
சொருபத்தைப் பெற்றுச்
சித்துரு வாகவே
இருக்கக்,
கோவிலூர் வாழு
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம். (9)

## ஸ்ரீ முக்தி ராம லிங்க ஞாந தேசிகர் தோத்திரம்.

ஆவியம் இன்றி
ஆவனப் புற்றே
ஆயினை யார்களை
விரும்பாக்,

காவிநல் ஆடை
தனைத்திநம் அணிந்து
கருவில்வா ராவகை
அருள,

ஓவுதல் இன்றி
ஒவியம் போல
ஒளிருந்தன் அருளினைக்
காணக்,

கோவிலூர் வாழும்
முக்திரா மலிங்கக்
குருபரன் தனைத்திநம்
பணிவாம் (10)



## திருக் களர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர் தோத்திரம்.

சிருறு நின்தா
மரைமலர்ப் பதமே
சேர்ந்தனர் முன்னம்வந்
தநேகர்,

நாருறும் அவர்கள்
விளைந்தன எல்லாம்
நன்களித் தின்பம
தளித்தாய்,

காருறும் எனையும்
ஒருபொரு ளாகக்
காத்தருள் செய்திருக்
களர்வாழ்,

பேருறு வீர
ஞாநதே சிகநின்
பிறங்கடி யினைத்திநம்
பணிவாம். (1)

உளர்விலா உளத்தால்
உணர்த்திடும் உண்மை
உணர்சக்தி யிலெற்குவெம்
விடமார்,

களமுளான் மனைவி
கங்கைநன் மதியைக்
கழற்றியே துறவியாய்
வந்து,

கிளர்மிகு வேத
வாக்கியப் பொருளைக்
கேட்டுய அருள்வடி
வதிருக்,

களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யிணைத்திநம்
பணிவாம். (2)



குளிர்முதற் படைகள்
இன்றியஞ் ஞாநக்
கூர்பகை கெடுப்பதற்
குவந்த,

நளிரிணைப் பார்த்தோர்
மிகவியந் திடவே
நானெனும் உடலின்மோ
கத்தை,

எளிதிலே ஒழிய
நீக்கிநின் விழியால்
ஏத்துதற் பதமளித்
ததிருக்,

களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யிணைத்திநம்
பணிவாம். (3)

அளிமலர் விட்டுவிட்
டாய்ந்துநன் மதுவுண்
டகமகிழ்ந் திருப்பதே
போலத்,
தளர்மிகு நறுந்தார்
அணிந்தமார் புடனே
தரணியில் அருளொடு
வந்து,
களிதரும் கருணை
கைவரப் பெற்ற
கண்டரைக் கடவுளர்
ஆக்கிக்,
களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம் (4)



வளர்பந்தம் நீக்க
வந்திடு பவர்க்கு
வழங்குறு கருணையால்
ஞாநம்,
கிளர்தர மறைமா
வாக்கியப் பொருளைக்
கிளத்திநன் கவரைமுன்
னுற்ற,
தளைகளைப் போக்கிச்
சச்சிதா நந்தத்
தன்தனிச் சொருபமாக்
குதிருக்,
களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம் (5)

விளர்பரு வத்தான்
விவேகமில் லாது
விடயத்தில் விடஸைப்போற்
றிரிந்து,

தளர்வினைப் பொருந்திச்
சாதநம் பெற்றுச்
சாதுசங் கத்தினைச்
சாராக்,

களவினைச் சார்ந்து
கனிவிலென் மநதைக்
கனியினுங் கனிவுறுத்
துதிருக்,

களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம்





தளர்வுறும் பருவத்
தைம்பொறி களுந்தஞ்
சத்தியற் றிருக்கும்போ
தடியேன்,

உளர்தலில் லாமல்
உன்னையே காண
உளத்தினில் நினைக்குமா
றருள்வான்,

வளமுறு பத்தர்
நின்சரண் அடைந்து
மதித்தன அருளிட
வேதிருக்,

களரில்வாழ் வீர
ஞநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம்

பிளவிலா வேதப்
பொருளினை எவர்க்கும்
பிழையற விளம்புதல்
கருதிக்,
கொளவரும் பொருளைக்
கரதலா மலகக்
கனியெனக் கொடுக்கக்கொண்
டருளால்.
தளர்விலா அநுப
வாநந்தம் உற்றவென்
றன்மையார் அறிவரிங்
குதிருக்,
களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யிணைத்திநம்
பணிவாம் (8)



வளமையார் உளத்தோய்
கனவினில் வந்து
வழுக்கிலா "நற்கவி
புனைக",
"அளவிலா நூற்கள்
ஆக்குக" எனும்உன்
ஆக்ஞையை எளியனுக்
கிட்டாய்,
களவிலா நின்தன்
அருளினைக் கொண்டு
கனபன்னூல் இயற்றினன்
சீரார்,
களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யிணைத்திநம்
பணிவாம் (9)

களகமூர்ந் தேகும்
கணபதி என்கோ
கலாபியூர்ந் தேகுவோன்
என்கோ,

இளவநம் உவணம்
மழவிடை முறையின்
ஏறியூர்ந் திடுபவர்
என்கோ,

களபமார் தேவி
என்னுகோ நினைநேர்
காணுமா றருள்புரி
வாய்சீர்க்,

களரில்வாழ் வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம் (10)



அளவிலா வன்பர்
அன்புடன் வந்தே
அடியிணை போற்றிநின்
றிறைஞ்ச,

வளமுறு பத்தர்
தமைநல்ல வழியில்
வழங்குமா றருள்தரும்
இறையாய்க்,

கிளர்தரு தெங்கு
மாபலா ஆதி
கெழுமுகா உலவிடும்
திருவாய்க்,

களருறை வீர
ஞாநதே சிகநின்
கழலிணை யினைத்திநம்
பணிவாம். (11)

மாசிலா மணியே
கருணை வா ரிதியே
மறுவிலா வாக்கினுற்
றுதிப்பார்க்,

காசிலா முத்தி
அன்புடன் அளிப்போய்
அன்பினுல் நின்தனை
அடைந்தேன்,

தூசிலா தென்தன்
சொரூபம தளித்துச்
சுத்தமெய்ஞ் ஞாநியாக்
குதியால்,

காசிலாக் களர்வாழ்
வீரசே கரநின்
கழலிணைக் கருத்தினில்
வைப்பாம். (12)



விளக்கமிலா நாற்கால்போற்
றிரிந்த வென்னை
விரும்பியழைத் தருகிருத்தி
விநயத் தாலே,

விளக்கமுற மதிகொடுத்துப்
போத மூட்டி
விசுத்தபரப் பிரமமதாய்
விளங்க வைத்து.

உளக்கவலை யிலாதிருக்கச்
செய்தா யென்றுல்
உன்பெருமை தனக்குமள
வுரைப்பார் யாரே,

அளப்பறுசீர் வீரசே
கரஞா ந தேசிகநின்
அடியிணைகள் அநவரதம்
அநுசந் திப்பாம். (13)

34 திருக் களர் ஸ்ரீ வீர சேகர
ஞாந தேசிகர் தோத்திரம்.

மாணிக்க வாசகநின்
வாசகத்தைத் தான்கேட்ட
வண்செவியாம் மேலுலகம்
புகுதலைநான் கண்டு,

நாணிக்கை கூப்பியுன்
னற்சீர்கள் கேட்டு
நன்மையுறக் கரவொடுகீழ்
நாடுறுமென் மநதைக்,

காணிக்கை யாத்தத்தங்
கரஜலத்தாற் கொடுத்தேன்
கவினியநின் னருள்கொடாது
மேனேக்கக் கருதாய்,

தோணிக்கொப் பவிருக்கநீ
துன்னுகருக் கடலைத்
துணைவேறு தாண்டுதற்குத்
தேடுவதொன் றுண்டே. (14)



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 10 | பொருந்தார் | பொருந்தர் |
| 14 | 3 | புகறுநற் | புகலுநற் |
| ,, | 6 | கமன | கன்ம |
| ,, | 8 | யாவர்க்குந் | யவர்க்குந் |
| 20 | 3 | ஆயிளை | ஆயிழை |

21 வைராக்கிய தீபம் பத உரை 0 50
22 மேற்படி உரைஉதாரணக்கவி உரை 1 00
23 பக்தி சதக உரை உதாரணக் கவி ,, 1 00
24 கைவல்ய நவநீத உரை உதாரணக்
கவி ஆதித்தன் உரை 2 50

| | | | |
|---|---|---|---|
| 25 | வேதாந்த சாஸ்திர ரத்நாவலி | 3 | 00 |
| 26 | கீதாத் திரயம் 3 கீதை | 3 | 00 |
| 27 | வேதாந்த சாஸ்திர ரத்நத் திரயம் பஞ்சதசி, அஞ்ஞவதைப் பராஈணி, விவேக சூடாமணி | 3 | 00 |
| 28 | சீடாசாரம் பாவ போதிநி உரை | 0 | 50 |
| 29 | வைராக்கிய சதக ஸ்தோத்திர உரை | 0 | 19 |
| 30 | காசி காநந்த விஜயம் | 0 | 25 |
| 31 | கீதாசாரத் தாவட்டு நக்ஷத்திர | 0 | 25 |
| 32 | மந்திர உபதேசம் [விளக்க உரை | 0 | 25 |

| | | |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஜ்ஜூஷர் வசநம் | 2—50 |
| 2 | விசார சாகரம், வசநம். | 2—25 |
| 3 | கதா சரித சாகரம், வசநம் கதை. | 2—25 |
| 4 | வியாச தாத்பரிய நிர்ணயம், வசநம். | 0—50 |
| 5 | நைஷ்க் கர்மிய சித்தி, வசநம். | 0—50 |
| 6 | ஸ்வாராஜ்ய சித்தி, வசநம். | 0—50 |
| 7 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி, வசநம் | 0—50 |
| 8 | வேதாந்த பரிபாஷை, வசநம். | 0—44 |
| 9 | ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் | 0—25 |
| 10 | ஹரிமீடே-ஹரிதத்வ முக்தாவலி பதஉரை. | 0-75 |
| 11 | மண்டல பிராஹ்மண உபநிஷத் [ராஜயோக பாஷ்யம். | 0—25 |

12 வேதாந்த சஞ்ஞா-வசநம். 0—13

13 திருக்களர் வீர சேகர ஞாந தேசிக சரிதம் 1—00

14 மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி
[கவி 162. 0—50

15. நாநா ஜீவ வாதக் கட்டளை உரை. 2—00

16 ஞேய சாரத் தாலாட்டு லகு சந்திரிகை உரை 2-00

17 மேற்படி நக்ஷத்திர விளக்க உரை. 0—25

18 சசிவர்ண போதம் பதார்த்த பாஸ்கரன்
[உரை. 2—00

19 மகாராஜத் துறவு மனப் பிரசாதினி உரை. 2—00

20 வைராக்ய (பக்தி) சதக பத உரை
[பொழிப் புரை. 1—50